# 74

## மூன்று உள்ளங்கள்

அன்றிரவு படுக்கை அறைக்குள் நுழைந்ததும் சுந்தாவுக்கு திகைப்பாகப் போய்விட்டது.

கதவு மூடினதும் மூடாததுமாக இருந்தபொழுதே சுந்தரம் ஆர்வத்துடன் எழுந்துபோய், 'சுந்தா, என்ன பிரமாதமாக இருக்கிறதே, சாந்தி முகூர்த்த அறைபோல!' என்றான்.

கதவின் மறுபுறமிருந்து, 'இந்தாடி சுந்தா, பால் கொண்டுபோக மறந்துவிட்டாயே!' என்று குரல் கேட்டது.

'இப்பவே பிடித்துத் தூக்கம் வராது போலிருக்கிறதே. உங்கக்காவை கூப்பிடேன், சற்று உட்கார்ந்து பேசிக் கொண்டிருப்போம்!' என்று சுந்தரம் உள்ளே கிடந்த ஒரு எண்ணத்தை ஏதோவொரு உருவம் கொடுத்து வெளியிட்டான்.

சுந்தாவின் முகம் சட்டென்று மாறிற்று. சற்று கோபம் கூட அதில் தென்பட விருந்தது. ஆனால், அவள் சமாளித்துக்கொண்டு, 'நீங்கள் கூப்பிடுங்கள், நான் கூப்பிட்டால் வரமாட்டாள்!' என்று படுக்கையில் போய்படுத்துக்கொண்டாள்.

சுந்தரம் அவள் மனோபாவத்தை ஊகிக்காதவனாய், 'கூப்பிட்டாளே, ஏன் என்று கேட்டுவிட்டு வாயேன்!' என்றான் பிறகு.

'நீங்கள் தான் கேளுங்கள்.'

சுந்தரம் நாற்காலியிலிருந்து எழுந்து வெளியே வந்தான்: மீனாக்ஷி பால் பாத்திரத்துடன் நின்றுகொண்டிருந்தாள். உள்ளே நடைபெற்ற சம்பாஷணையை அவள் கேட்டிருக்க வேண்டும். சுந்தரம் வந்ததும் அவளுக்குச் சற்று சங்கடமாகப் போய்விட்டது. ஆனால், பெண்ணல்லவா?

சற்று உரத்த குரலில், 'சுந்தா படிக்கிறாயா, நீயா வந்தாய்? இந்தா!' என்று பாத்திரத்தை அவன் கையில் கொடுத்துவிட்டு, அவன் மனைவியுடன் சற்றுமுன் பேசின வகை முற்றிலும் தப்பு என்று அறிவிக்க

*கிராம ஊழியன், 01.12.1943*

முயலுபவள் போல அவனைக் குறிப்பாகப் பார்த்தாள். அவன் தெரிந்து கொள்ளவில்லை.

'வாயேன், மீனாக்ஷி, சற்று பேசிக் கொண்டிருப்போம்!' என்றான்.

வேறு வழியில்லாமல் அவள் 'நீ போ உள்ளே!' என்றவாறு ஜாடை காட்டிவிட்டு 'நாழியாகல்லியோ, வெறுமனே என்ன பேசுகிறது? படுத்துக்கொள், நாளைக்குப் பேசிக்கொள்வோம்!' என்று உரத்துச் சொல்லிக் கொண்டே போய்விட்டாள்.

சுந்தரம் பால் பாத்திரத்தை மேஜைமேல் வைத்து விட்டு கதவை மூடித் தாழ்பாளிட்டு வெற்றிலை போட்டுக் கொள்ள மேஜையண்டை உட்கார்ந்தான்.

'சுந்தா, வெற்றிலை போட்டுக் கொள்ளவில்லையா?'

'எனக்கு தூக்கம் வருகிறது, வேண்டாம்!'

'பாலையாவது சாப்பிட்டுவிட்டுப் போ!'

'நீங்கள் சாப்பிடுங்கள் இன்று.'

'என்ன கோபம் வந்துவிட்டது இப்பொழுது?'

'எனக்கென்ன கோபம்? தூக்கம் வருகிறது, உங்களுக்கு தூக்கம் வரவில்லை-மீனாக்ஷியைக் கூப்பிட்டேளே, பேச வரவில்லையா?'

'நாழியாயிடித்தாம் நாழி.'

'ஆகவில்லையா? என்னோடே பேசற போது உங்களுக்கு நாழி தெரியும். மீனாக்ஷியோட பேசறபோது தெரியவே தெரியாது' என்று சொல்லிவிட்டு சுந்தா மறுபுறம் திரும்பிப் படுத்துக்கொண்டாள்.

அவள் சொன்னதை ஒருவகையிலும் சுந்தரத்தால் ஆட்சேபிக்க முடியவில்லை. ஏனென்றால், வந்த இரண்டு மாத காலமாக நடந்த உண்மையை அவள் பட்டவர்த்தனமாகச் சொன்னாள்.

சுந்தரத்தின் மனைவி சுந்தா அவன் சொந்த அத்தை மகள். மீனாக்ஷி, சுந்தரத்துடன்கூட சிறு பிள்ளைக் காலத்தில் விளையாடினவள். அவளை அவனுக்குக் கொடுப்பதாகத்தான் இருந்தது. ஆனால், எதனாலோ கடைசியில் மீனாக்ஷி பட்டணத்தில் ஒரு வக்கீலுக்கு வாழ்க்கைப் பட்டாள். கலியாணமாகும்வரை அவள் அவனுடன் தாராளமாகப் பேசுவதில்லை. தன் கலியாணமும் ஒரு வருஷத்திற்கெல்லாம் அவன் கலியாணமும் நடந்த பிறகு அவனுடன் தாராளமாகப் பேச ஆரம்பித்தாள். தங்கை புருஷன், மாப்பிள்ளை என்ற உறவுகள் எல்லாம் அந்தப் பழக்கத்திற்கு அனுகூலமாக இருந்தன.

சுந்தாவின் கலியாணத்தின் போதும், சாந்திமுகூர்த்தத்தின் போதும் மீனாக்ஷிதான் பிரதான பாத்திரம். புருஷன் மனைவிகளுக்குச் செய்ய வேண்டிய சுச்ருஷைகள் முழுவதும் அவள் பொறுப்பு. வெகு உற்சாக மாகவும், அன்பாகவும் எல்லாம் செய்தாள்.

இப்பொழுது நான்கு வருஷங்களுக்குப் பிறகு – தங்கைக்கு

அபார்ஷனுக்குப் பின் ஏற்பட்ட பலவீனத்தை உத்தேசித்து—ஒத்தாசை யாக இருக்க வந்திருந்தாள்.

சுந்தரம் தம் புருஷனாகவில்லையே என்ற துக்கம் அவள் இளம் உள்ளத்தில் கொஞ்ச காலம் இருந்தது. அவன் சுந்தாவின் புருஷன் ஆனவுடன் அதை ஒருவாறாகத் தன் மனத்திலிருந்து நீக்கி, தன் தங்கை யின் சுகத்தைக் கண்டு தான் மகிழ்ச்சி கொள்வது என்று தீர்மானித்தாள். அதனாலேயே, அவள் செய்த சுச்ருஷைகள் எல்லாம் அவளுக்கு பெருத்த இன்பமாக இருந்தது. சுந்தாகூட தன் தமக்கையின் பரிவைக் கண்டு இளகி சந்தோஷமடைந்தாள். புது வாழ்க்கையின் இன்ப மயக்கத்தில் சுந்தரத்துக்கு மீனாக்ஷியின் ஊக்கம் சாதாரணமாக பெண் வீட்டாரின் மரியாதை போலத்தான் பட்டது. ஆனால், அவனுடைய சாந்தி முகூர்த்தத்தின் போது, திடீரென்று அவளுடைய உற்சாகத்தின் அந்தரங்கமான உற்பத்தி ஸ்தானம் அவனுக்கு ஏதோ ஒரு சந்தர்ப்பத்தில் மின் வெட்டு போலத் தென்பட்டது.

மூன்றாம் நாள் அறையைச் சிங்காரித்துவிட்டு மீனாக்ஷி, வாசலில் வேறு பந்துக்களுடன் பேசிக்கொண்டு உட்கார்ந்திருந்த சுந்தரத்தை 'சுந்தரம், இங்கே சித்தெ வாயேன்!' என்று கூப்பிட்டாள்.

'போடா, போடா!' என்று கேலியில் இறங்கின சிலர் கத்தினார்கள்.

சுந்தரம் கூடத்திற்கு வந்து, மீனாக்ஷியிடம் 'ஏதுக்குக் கூப்பிட்டாய்?' என்று கேட்டான்.

அவள் கொல்லென்று சிரித்துவிட்டு, 'ஏதுக்கா, இங்கே வா!' என்று அவனைப் படுக்கை அறைக்குக் கூட்டிக்கொண்டு போனாள். படுக்கை யைக் காண்பித்து, 'உட்காரு!' என்றாள். தங்கையைக் கூட்டிக்கொண்டு வருவதற்காகத் திரும்பினாள்.

'இந்தா, மீனாக்ஷி, நீயும் சித்தெ உட்காரு இப்படி!' என்று படுக்கை யில் நகர்ந்து இடம் கொடுத்தான்.

மீனாக்ஷி 'நீ அசட்டு பிசட்டுனு பேசாதே!' என்றாள் முதலில். பிறகு, அவளுக்கு அடக்க முடியாமல் திடீரென்று கண்ணீர் பொங்கிக் கொண்டு வந்துவிட்டது.

'ஏன் மீனாக்ஷி?' என்று சுந்தரம் பதறிக் கொண்டு எழுந்தான்.

'ஒன்றுமில்லை!' என்று அவள் கண்களைத் துடைத்துக்கொண்டே வெளியே போய்விட்டாள்.

ஏன் என்று அர்த்தமாவதற்கு அப்பொழுது அவனுக்கு நிலை இல்லை.

இப்பொழுது, அவள் வந்த ஒரு மாதத்திற்குப் பிறகு உணர்ச்சிகள் அவரவர்களுக்குள்ளே வியக்தமாக ஆரம்பித்தன. மீனாக்ஷி தன் தங்கை மூலம் சுந்தரத்துக்குச் சௌகரியங்கள் செய்து மகிழ்ச்சி பெறவேண்டும் என்ற திடசங்கல்பத்தைத் தான் கொண்டிருந்தாள்.

ஆனால் மீனாக்ஷியின் பணியும், அவள் நடந்துகொண்ட இன்ப

முறையும் சுந்தரத்தை மயக்கம் கொள்ளச் செய்து விட்டன. எந்நேரமும் அவளுடன் பேசுவதும், அவள் முகத்தைப் பார்த்து மகிழ்ச்சி அடைவதும் அவனுக்கு ஒரு அவசியமாகக் கூடப் போய்விட்டது.

சுந்தா கணவன் மன நிலையை வெகு சீக்கிரம் அறிந்து கொண்டாள். சில நாட்கள் அலட்சியமாக இருந்தாள். பிறகு அவளால் சும்மாயிருக்க முடியவில்லை. ஜாடையாகத் தன் மனதை வெளிப்படுத்தினாள்.

மீனாக்ஷி உடனே தெரிந்து கொண்டு திகிலடைந்து, தன் நடத்தையை ஜாக்கிரதைப் படுத்திக்கொண்டாள்.

சுந்தரம் எதுவும் தெரிந்து கொள்ளாமல், உணராமல் ஒரே நினைப்புக் கொண்டவனாய் நடந்து கொண்டான்.

வந்த முதல் மாதம் முழுவதும் மீனாக்ஷி தனியாகவே வீட்டுக் காரியங்களைச் செய்தாள். சுந்தா மிகவும் பலவீனமாக இருந்தாள். அப்பொழுது சில சமயங்களில் சுந்தரம் மீனாக்ஷி தனியாகத் திண்டாடுவதைப் பார்த்து, 'மீனாக்ஷி நான் வேண்டுமானால் ஜலம் நிறப்பி வைக்கட்டுமா?' 'காபி வைக்கட்டுமா? என்று கேட்பான். மீனாக்ஷி கண்டிப்பாக வேண்டா மென்றுவிடுவாள்.

'தனியாகத் திண்டாடுகிறாள். காபி வைக்கிறேன் என்றால்கூட வேண்டாமென்கிறாள்!' என்று சுந்தரம் பலதடவைகளுக்குப் பிறகு ஒரு தடவையாகத் தன் மனைவியிடம் சொன்னான்.

'நான் தனியாகச் செய்யவில்லையா? என்ன திண்டாட்டம்? நான் செய்தபோது திண்டாட்டமாக உங்களுக்குத் தோன்றவில்லையே!' என்றாள் சுந்தா.

சுந்தரத்துக்குத் தூக்கிவாரிப் போட்டுவிட்டது. மனைவியோடு அந்த விஷயமாக மேலும் பேச அவனால் முடியவில்லை.

சில தினங்களுக்கெல்லாம் சுந்தாவும் எழுந்து சில காரியங்கள் செய்ய ஆரம்பித்தாள்.

'சுந்தா, நீ எதுக்கு அலட்டிக்கிறே. நான் சேறேன் எல்லாம்!' என்றாள் மீனாக்ஷி.

'நீ எல்லாம் சேறேன்னுதான் உன் அத்தான் அங்கலாய்க்கிறாரே?' என்று சொன்னாள் சுந்தா.

மீனாக்ஷியும் திடுக்கிட்டாள்; சமாளித்துக் கொண்டு, 'அவன் ஏதாவது சொல்லுவான்...' என்றாள்.

'அதுதான் எதற்கு!' என்று சுந்தா அப்புறம் போய் விட்டாள்.

நாற்காலியில் சாய்ந்தபடியே யோசிக்க யோசிக்க சுந்தரத்துக்கு அவள் உள்ளத்திலிருந்தது தெளிவாயிற்று:

'மீனாக்ஷிக்கு என்மேல் பிரியம்; நானும் அவளிடம் ஈடுபட்டுத்தான் இருக்கிறேன். இவை இரண்டும் உண்மைகள். ஒளிப்பதில் என்ன பயன்?

'சுந்தா, அடாடா, பால் ஆறிப்போயிருக்குமே! மருந்து சாப்பிடு கிறவள் இந்தமாதிரி...' என்று சொல்லிக் கொண்டு சுந்தரம் அவளை எழுப்பினான். அவள் தூங்கவில்லை; அழுது கொண்டிருந்தாள்.

'ஏனடி சுந்தா! ஏன்? ஏன் அழுகிறாய்?'

'ஒன்றுமில்லை, இந்த உடம்புக்கு என்ன வந்தது என்று தான் அழு கிறேன். என் கையால் உங்களுக்கு ஒன்றும் செய்ய முடியவில்லை.'

'இதற்காகவா... அசடு! மீனாக்ஷிதான்... அவள் தான் செய்கிறாளே!'

'மீனாக்ஷி செய்தால் நான் செய்தாற்போலவா?' என்றவள் அத்துடன் நிற்காமல், 'அவள் செய்தாலே போதுமா உங்களுக்கு?' என்றாள்.

'என்ன சுந்தா, அசட்டு பிசட்டுனு கத்துகிறாயே, அவள் காதில் பட்டால் துக்கப்படமாட்டாளா?' என்று சுந்தரம் தாழ்ந்த குரலில் சொன்னான்.

'நான் துக்கப்பட்டால் தேவலையாக்கும்?' என்று சுந்தா உரக்கவே சொன்னாள்.

'நீ எதற்காக துக்கப் படவேண்டும்?'

'எதற்காகவா?...சரி படுத்துக்கொள்ளுங்கள். எனக்குத் தூக்கம் வருகிறது.'

'ஜலம் கொண்டு வரவில்லையா, குடிக்க?'

'போய்க் கொண்டுவருகிறேன்!' என்று சுந்தா எழுந்திருக்க முயன்றாள்.

'நீ எழுந்திருக்காதே. நான் கொண்டு வருகிறேன்!' என்று சுந்தரம் எழுந்து கூடத்திற்குப் போனான்.

கூடத்தில் விளக்கு எரிந்து கொண்டிருந்தது. மீனாக்ஷி கட்டாந் தரையில் ஒருக்களித்துப் படுத்துக்கொண்டிருந்தாள். சுந்தரம் வரும் சத்தம் கேட்டதும், படுத்தபடியே தலை தூக்கி அவனைப் பார்த்தாள். அதில் கண்ணீர் வடிந்து கொண்டிருந்தது. விளக்கு வெளிச்சத்தில் சுந்தரம் கண்களுக்கு அதுவரையில் தென்படாத ஏக்கம் பளிச்சென்று தென்பட்டது. இந்தச் சிறு சேவைமூலம் கிடைத்த ஆறுதலுக்குக்கூட ஹானி வரப்போகிறது என்ற எண்ணம் அவளுடைய நிராசையைக் கூட அந்த நிமிஷம் அதர வடித்து, ஏக்கத்தைத் தலைதூக்கச் செய்ததோ?

சுந்தரம் பார்த்து ஸ்தம்பித்துப் போனான். சிறிது நேரம் அவனுக்கு மீனாக்ஷியின் நிலை விளங்கவில்லை.

அந்த நேரமான பிறகு, அவன் பெருத்த ஏக்கமும் கிளர்ச்சியும் கொண்டான். உடனே மீனாக்ஷியின் போக்கு முழுவதும், அந்தப் பொருளில், அவனுக்கு முற்றிலும் தெளிவாயிற்று.

'மீனாக்ஷி, உன் உள்ளத்தில் எவ்வளவு ஏக்கத்தை நிராசையாக உருமாற்ற நீ எந்தப்பாடு படுகிறாயோ? எங்கள் இருவருக்கும் செய்யும் இந்தப் பணி உனக்கு ஒரு ஆறுதலாக இருக்கிறதா? என்ன திடத்துடன் நீ புன்முறுவல் படர்த்தி உன் முகத்தின் உண்மையை மறைக்கிறாய்?'

ஆமாம், அவள் உள்ளம் அந்தமாதிரி திரளாவிட்டால் –வெறும் சேவை சுகம் மட்டும் அவளுக்கு ஆறுதல் கொடுக்காது. நிச்சயம் இந்த உபசரணைகள் மூலம், தன் தங்கைக்குச் செய்யும் சௌகரியங்கள் மூலம், அவள் பெறும் இன்பத்தின் மூலம், இவள், தனது உணர்ச்சிக்கு ஓரளவு இனிமை தருகிறாள்–ஓரளவு அதை ஒடுக்கவும் செய்கிறாள்.

'அடடா! இத்தனை நாட்கள்...' என்று அவள் எண்ணங்கள் ஓடிக் கொண்டே இருந்த பொழுது, மீனாக்ஷி ஜாடையாகக் கூஜாவைக் காட்டி, எடுத்துக் கொண்டு போகச் சொன்னாள்.

சுந்தரம் அந்த மௌன உத்தரவுக்குக் கீழ்படிந்து கூஜாவை எடுத்துக் கொண்டு போய் உள்ளே வைத்தான்.

அந்தப் பேச்சுத் துணையற்ற ஜாடை, சுந்தரத்திற்கு எல்லாவற்றையும் விளக்கிற்று. தன் உள்ளத்தில் குமுறிய ஏக்கத்தின் ஆழம்; மீனாக்ஷியின் உள்ளத்தில் மடிந்து மடிந்து, உயிர்பெற்று, நிராசையாக மாறும் பாசம்; தன் மனைவியின் உள்ளத்தில் கொந்தளித்துக் கொண்டிருக்கும் வேதனை உருவான அசூயை.

'சுந்தா, மீனாக்ஷி...' என்று அதே உணர்ச்சிப் பெருக்கில் ஏதோ ஆரம்பித்தான் தடுமாறின குரலில்.

'இங்கே வாருங்கள், கிடக்கிறது!' என்றாள் சுந்தா.

●